VOL. XLVII. JANUARY 1910. No. 1.

# அருணோதயம்.

# ARUNODAYAM.

THE

## TRANQUEBAR MISSION JOURNAL.

நீ எழும்பி வெளிச்சமாகு, ஏனெனில் உன் வெளிச்சம் உன்னண்டை வருகிறது. ஏசாயா 60, 1.

பொருள் அட்டவணை.



PRINTED AT THE EV. LUTH. MISSION PRESS,
TRANQUEBAR.
1910.

## மரண அறிக்கைகள்.

என் அருமை குமாரன் ஜான் தேவநேசன் பிள்ளை ரங்கூனில் சில நாள் வியாதியாயிருந்து நவம்பர் மாதம் 22-ம் தேதி பிற்பகல் 4½ மணிக்குக் கர்த்தருக்குள் அமைதலாய்ப் பரம இளைப்பாறுதலுக்குச் சென்றார். அவர் சடலம் மறுநாள் மாலை 5 மணிக்கு ரங்கூன் PROTESTANT உத்தான தோட்டத்தில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது.

அவர் தன்னோடிருந்த தன் மூத்த சகோதரன் சாமுவேல் பிள்ளை சமீபத்திலிருக்கையில் ஆயத்தமுள்ளவராகக் கடைசியாய்ப் பாடின பாட்டு:

"GOD BE WITH YOU TILL WE MEET AGAIN."

**T. Isaac Pillay.**

*Age 28 yrs, 1 mth. 26 days.* Poreiyar, Tranquebar.

---

எனது மாமியார் நல்லம்மாள் கடந்த டிசம்பர் மாதம் 9-ம் தேதி இருதய நோவால் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள். அவர்கள் சடலம் மறுநாள் சகல கிறிஸ்தவ மரியாதையோடும் சாத்தங்குடியில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

P. ஜான் தாவீது.

தரங்கை. } செமிநேரி.

# அருணோதயம்.

தரங்கன்பாடி

மிசியோன் பத்திரிகை.

No. 1. ஜனுவரி. 1910.

## இயேசுகிறிஸ்து.

### 1. அவர் பராபரனுடைய வார்த்தை.

" ஆதியிலே வார்த்தை இருந்தது; அவ்வார்த்தை பராபரனிடத்திலிருந்தது; அவ்வார்த்தை பராபரனுமாயிருந்தது" யோ. 1. 1.

நமது அருமை மீட்பராகிய இயேசுகிறிஸ்துவின் ஜெனனத்திருநாளை எக்களிப்புடன் கொண்டாடி அவரது இரக்ஷண்ய நாமத்திலே புதுவருஷத்தில் பிரவேசித்திருக்கிற நமக்கு இவ்வினிய தியானங்கள் நமது இருதயங்களை அவர் வசம் ஏறெடுக்க உதவுமாறு இயேசு பெருமானே அருள்புரிவாராக.

எண்ணங்களின் வெளிப்பாடே வார்த்தை. பராபரனுடைய சித்தத்தில், மானிட வார்த்தைகளிலமைத்து விவரித்துரைக்க முடியாத ஓர் மகத்தான திவ்ய எண்ணம் இருந்தது. அந்த எண்ணத்தின் வெளிப்படுத்தலாகவே அவர் இயேசுவை நமக்குத் தந்தார். பராபரனுடைய திருச் சித்தத்தை நாம் அறிய விரும்பினால், இயேசுவின் மூலமாய்த்தான் அதை அறிய வேண்டும். பராபரனுடைய எண்ணங்களைத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் நாம் இயேசுவை தியானித்தறியவேண்டும். அவர் பராபரனுடைய எண்ணம் எதுவென்றும் தாம் எது காரணத்தால் எதைச் செய்யும் பொருட்டு இவ்வுலகில் மனித அவதாரமாயினார் என்றும் விளவும் இருதயத்துக்கு ஆறுதல் உண்டாக,

"பராபரன் தம்முடைய ஒரேபேறான குமாரனை அவர்பேரில் விசுவாசிக்கிறவனெல்லாம் கெட்டுப் போகாமல், நித்திய சீவனை அடைவதற்காக, தந்த அத்தன்மையாய் லோகத்தைச் சிநேகித்தார்" என்னும் மனோகரமான வாக்கியத்தால் அருளின் ஒளியைத் தெளிவாய் வீசப்பண்ணுகிறார்.

பாவ மானிடரின் ரட்சிப்பு சுத்த கிருபையால் உண்டாகும் ரட்சிப்பாம். இயேசுவின்பேரில் பூரண விசுவாசமாயிருப்பவன் அநுபவிக்கும் இந்த இரக்ஷண்ணியம் பராபரனுடைய திவ்ய எண்ணமாயிருந்தது. இந்த எண்ணத்தை வெளிப்படுத்தவும், நீணிலத்தோர் மீதுள்ள தமது நித்திய அன்பைப் பலிதமாக்கவுமே அவர் இயேசுவை இவ்வுலகிற்கு அனுப்பினர். அவ்வாறே, இயேசுவானவரும் தமது ஜீவியத்திலும், தமது கிரியைகளிலும், தமது சம்பாஷணைகளிலும், தமது பாடுகளிலும், விசேஷமாய்த் தமது மரணத்திலும் பராபரனுடைய சர்வ வல்லப இருதய கமலத்தில் கிரியைசெய்து கொண்டிருந்த ஆழமான எண்ணங்களைப் பிரசித்தப்படுத்தினர். ஆத்துமாவே! பராபரன் பாவமனுட சாதியைப் பற்றி என்ன எண்ணங்கொண்டிருந்தார், இப்போது என்ன எண்ணங்கொண்டிருக்கிறர், இனி என்ன எண்ணங்கொள்ளுவார் என்று அறிய ஆசிக்கிறயா? இயேசு கிறிஸ்து ஆர் என்பதைக் கற்றறிந்துகொள்; இயேசுகிறிஸ்து ஒருவரே பராபரனுடைய திவ்ய எண்ணங்களை நமக்குத் தெளிவுறத் தெரிவிக்கும் வார்த்தையானவர். பராபரனுடைய எண்ணத்தையும் இயல்பையும் இயேசுவின் மூலமாய் மாத்திரம் நாம் கற்றறியலாம். பராபரனுடைய வார்த்தையை ஏற்றுக்கொண்டு அவருடைய குமாரனது மரணத்தால் அவரோடு ஒப்புரவாக்கப்பட்டவர்கள் யாவரும் பராபரன் சுத்த சிநேகமாயிருக்கிறர் என்பதை அனுபவத்தால் ருசித்தறிந்து கொள்ளுகிறர்கள்.

ஆ, இயேசுவே! நாங்கள் உம்மை ஜீவனுள்ளதும், கிரியை செய்கிறதும், பேசுகிறதுமான பிதாவின் வார்த்தையாக நோக்கிப் பார்க்கிறேம்; உம்மால் நாங்கள் பராபரனிடம் வரவும் அவரில் களிகூரவும் இடம் பெறுகிறேம். ஆ, பரிசுத்த ஆவியானவரே! தேவரீர் இயேசுவானவரை எங்கள் உள்ளத்தில் மென்மேலும் தெளிவாகவும் பூரணமாகவும் வெளிப்படுத்தும்; நாங்கள் பிதாவை அறியவும், அவரைச் சிநேகிக்கவும், அவரை மகிமைப்படுத்தவுமாக இயேசுவை எங்களுக்குத் தெளிவாக்கும்; அப்போது நாங்கள் பிதாவினிடத்துக்கு எங்களை வழி நடத்தும் இயேசு கிறிஸ்துவை இது முதற்கொண்டு அதிகமதிகமாய்க் கற்றறிந்து கொள்ளுவோம். சிநேகம் நிறைந்தவரின் மனது அவர் வார்த்தையினல் வெளிப்படுமாப்போல பிதாவினுள்ளம் இயேசுவினல் எங்களுக்கு வெளியாகப்பண்ணியருளும்.

"அவருடைய நாமம் பராபரனுடைய வார்த்தை என்னப்படும்." அறி. 19, 13.

"ஆ, இயேசு கிறிஸ்துவே! ஆதி திருவார்த்தையே! பிதாவின் நல்சித்தமே செய்து தெரிவித்தீரே! C. I. S.

---



# இந்துக்களின் மதாசாரமும் சுகாதாரமும். *)

இந்துமதமானது சரிதை, கிரியை, யோகம், ஞானம் என்றும், இதுக்கேற்றபடி விக்கிரகாராதனை, சித்தாந்தம், வேதாந்தம் என்றும் பிரிவுபட்டிருப்பதுபோல், இந்த வழிகளுக்கடுத்த ஆசாரங்களும் வித்தியாசப்பட்டிருக்கின்றன. மேலும் சிவமதம் விஷ்ணுமதம் என்ற இரண்டு மார்க்கங்கள் ஒன்றுக்கொன்று பேதப்பட்டிருப்பதுபோல் அவைகளுக்கடுத்த ஆசாரங்களும் வித்தியாசப்பட்டிருக்கும். பின்னும் ஜாதிக்கு ஜாதி வெவ்வேறு தேவர்கள் ஏற்பட்டிருப்பதுபோல் அததற்குரிய ஆசார வேற்றுமைகளுமுண்டு. இத்தனை பெரிய சன்னல்பின்னலான காட்டுக்குள் நுழைந்து அதைப்பற்றிய ஒரு விபரம் எழுதுவது மிகவும் கஷ்டம். என்றாலும் அங்கங்கு நாம் காணும் சில மதாசாரங்களைக் குறித்துச் சுகாதார சம்பந்தமாய்ச் சிறிது பார்ப்போம். இவற்றுள்:—

1. **உபநயனம்** என்று சொல்லப்படும் பூணூல் சடங்கு. இது மறுபிறப்பாளர் என்ற பிராமண, க்ஷத்திரிய, வைசியருக்குரியது. உபநயனம் பெருதவன் எக்குலத்தில் பிறந்திருந்தாலும் அவன் சூத்திரனகவிருக்கிறன். உபநயனம் பெற்றபின் தான் அவன் தன் பிதாவின் குலத்தைச் சேர்ந்தவனவான். இது குழந்தையின் பின்னன நன்மையைப் பொறுத்ததால், சந்தோஷச் சடங்காய் நடந்து பூணூல் கலியாணம் என்னும் பெயர் பெறும். இனி அவன் தன் பிதாவின் மதாசாரங்களுக்கும் குலாசாரங்களுக்கும் கட்டுப்பட்டவன். வித்தியாரம்பஞ்செய்யக் கடமைப்பட்டவன். தினந்தவருது ஸ்நானஞ்செய்து, வஸ்திரந் துவைத்துத் தீட்டென்று சொல்லப்பட்ட யாவற்றுக்கும் விலகி இவ்வழியில் சுகாதார விதிக்கு இசைந்து நடக்கவேண்டும். தனது பின்னன நன்மையை நாடிக் கல்வி அபிவிர்த்தியுஞ் செய்ய வேண்டும்.

2. **விவாகமும் ஹோமமும்.** ஒருவன் விவாகஞ்செய்த தினமுதல் தன் மரணமட்டும் அல்லது தன் மனைவியின் மரணமட்டும் ஹோமம் என்ற அன்றாடக பலியைச் செலுத்தவேண்டியவனைபடியாலும், ஆசானிடங் குறைந்தபட்சம் பன்னிரண்டு வருஷம் வித்தை கற்கவேண்டியவனைபடியாலும் 17 அல்லது 19 வயதுக்குமுன் புருஷருக்குக் கலியாணம் நடந்ததில்லையென்று அறியலாம். உபநயனம் பெற்றதினமுதல் பள்ளிக்கூட முடித்து விவாகஞ்செய்யும் பரியந்தம் அவன் பிரமச்சாரி

---

*) இது சங். V. தேவசகாயம் ஐயர் தரங்கை சுவிசேஷ கூட்டத்தில் வாசித்தது.

என்னப்படுவோன். இனி அவனுக்குக் கிரகஸ்தன் அல்லது குடும்பஸ்தன் என்று பெயர். இனி அவன் செய்யவேண்டிய கடமைகளில் முந்தினது ஹோமம் வளர்த்தல்.

வீட்டைப் புதுச் சாணத்தால் மெழுகி, அத்தி, ஆல், அரசு, புரசு, மா, வன்னி முதலிய குறிக்கப்பட்ட மரங்களின் குச்சிகளைக் கொண்டுவந்து தீ வளர்த்து அதில் சிறுகச்சிறுக நெய் தெறித்து மந்திரஞ்சொல்லி முடித்துப் பிறகுதான் தனது மற்றக் கடமைகளைச் செய்யவேண்டும். மேற்கண்ட குச்சிகளாலும் நெய்யாலும் உண்டாகும் புகையானது கொள்ளைநோய், வாந்திபேதி முதலிய கொடிய நோய்களை உண்டாக்குகின்ற பூச்சிகளைக் கொன்றுவிடும். சுகாதாரமாக ஏற்பட்ட இச்சடங்கைத் தெய்வ வணக்கத்தோடு சம்பந்தப்படுத்தியதால் இது மதாசாரமாயிற்று.

3. **தீர்த்த ஸ்நானம்.** உலகத்தில் சுகத்தையுண்டுபண்ணுவதும் அதைக் கெடுப்பதுமாகிய தண்ணீர்கள் உண்டு. இந்தியாவில் கங்கையும் காவேரியும் தேக சுகந்தருந் தீர்த்தங்களில் விசேஷித்தவை. வானசாஸ்திரம், பூமிசாஸ்திரம், ரசாயனசாஸ்திரம், சுகாதார சாஸ்திரம் என்றவற்றில் விசேஷ அறிவுள்ள பூர்வ ஞானிகள் இன்னின்ன ஆறுகளிலும், அவை பாயும் இன்னின்ன இடங்களிலும் வருஷத்தின் இன்னின்ன காலங்களிலும் இத்தனை நாள் ஸ்நானம் செய்வதால் தேக சுகம் உண்டாகும் என்று அறிந்து அதைமட்டும் ஜனங்களுக்குச் சொன்னால் அசட்டையாயிருந்துவிடுவார்கள் என்ற அனுபவ பயத்தால் அந்தந்த விசேஷ தீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணிச் சுவாமி தரிசனஞ் செய்தால் புண்ணியமும் மோட்சமுங் கிடைக்குமென்று கட்டிவிட்டார்கள். மேற்கண்ட நதிகளிலும் வேறு புண்ணிய தீர்த்தங்களிலும், ஜலத்தோடு வருவதும் அதில் இருப்பதுமான செம்பு, இரும்பு, பொன், வெள்ளி, உப்புகள், தீமுறுகல்பாஷாணம், கெந்தகம் முதலிய உலோகவகை குறித்த காலம் ஸ்நானம் செய்பவர்களுக்குத் தேக சுகமளிக்க வல்லமை உள்ளது என்பதை மறுக்க முடியாது. மாயூரம் காவேரியில் முழுகின முடவனுக்குக் கிடைத்த மோக்ஷம் சரீர சுகமாகிய மோக்ஷமே தவிர பாவமன்னிப்பால் வரும் ஆத்தும மோக்ஷமல்ல.

4. அமாவாசை விரதம். 4 மோசே 10, 10; 28, 11; 1 சாமு. 20, 5-27; சங்கி. 81, 4-5 முதலிய வாக்கியங்களால் அமாவாசை யூதரின் மாதப்பிறப்பாயிருந்ததென்றும் அன்றைக்கும் மறுநாளும் அவர்கள் பலியிட்டு எக்காளமூதி ஆர்ப்பரித்து விருந்துண்டார்கள் என்றுந் தெரியவருகிறது.

பூரண சந்திரனுக்குப்பின் சந்திர வெளிச்சம் நாளுக்கு நாள் குறைந்துவருந் தேய் பிறையில் இருள் அதிகரித்து அமாவாசையன்றைக்குப் பூரண இருள் உண்டாகிறது. வெளிச்சம் சுகத்துக்கும் சீவனுக்கும், இருள் நோய்க்கும் மரணத்துக்கும் ஆதாரம். இருள் முழு இரவையும் ஆளுகிற அமாவாசை தினத்தில் பூமியின் அனல் அதிகமாய்க் குறைந்துபோவதால் வியாதியஸ்தர்களுக்கு வேண்டிய சரீர அனல் அதிகங்குறைய அவர்கள் அன்று தினத்தில் மரிக்க இடமுண்டு என்பது அனுபவத்துணிபு. பூமியிலுள்ள அந்தந்த இடங்களின் சீதோஷ்ணத்துக்குத் தக்கபடி அமாவாசையில் புஷ்டியான ஆகாரத்தாலோ, இலேசான போசனத்தாலோ சுகத்தைப் பேணிக்கொள்வது புத்தியுள்ள சிருஷ்டியாகிய மனிதனின் கடமை. அமாவாசையிலிருந்து மாதங்களைக் கணிப்பது வானசாஸ்திரத்திலும் வெகுதூரம் விர்த்தியடைந்திருந்தவர்களாகிய எகிப்தியரிடம் யூதர் எகிப்தில் கற்றுக்கொண்ட படிப்பு. எபிரேயர் என்ற யூதர் எகிப்திலிருந்த காலத்தில் அத்தேசத்தின் உஷ்ணத்துக்குத் தக்கபடி அமாவாசையில் இலகுவாய்ச் செரிக்கும்படியான மெல்லிய ஆகாரஞ் செய்திருப்பார்கள். குளிர்ந்த தேசமாகிய கானானுக்கு வந்தபின் அமாவாசையால் உண்டாகும் அதிக குளிர்ச்சிக்குத் தப்பிப் பிழைக்கப் பராபரன் அவர்களுக்கு மாமிசமும் திராட்ச ரசமுஞ் சேர்ந்த புஷ்டியான ஆகாரத்தைக் கட்டளையிட்டார்.

இந்தியாவின் மிச்சமான பாகம் உஷ்ண பூமியாயிருப்பதால், பூர்வகால ஞானிகள் தங்கள் சாஸ்திர அறிவுக்கேற்க அமாவாசையில் இரைப்பைக்கு ஒரு இளைப்பாறுதலைக் கொடுக்கும்படி அன்றையத்தினம் விரதத்தையும், ஒரு பொழுது உண்ணும் இலேசான ஆகாரத்தையும் ஏற்படுத்தி இந்த ஏற்பாட்டை ஜனங்கள் தலைமுறை தலைமுறைகளாய் அனுசரித்து வரும்படி உபாயந் தேடினார்கள். அப்படியே அமாவாசையில் விரதமிருந்து குளித்து முழுகி, இறந்துபோன தகப்பனுக்குத் தர்ப்பணம் செய்யவேண்டுமென்றும், அந்த நாளில் எவ்வித வேலையுஞ் செய்யப்படாதென்றுங் கற்பித்தார்கள். வேலைகளை நிறுத்துவதால் சரீரத்துக்கு ஓய்வும், விரதத்தால் இரைப்பைக்கு இளைப்பாற்றியும், ஸ்நானத்தால் தேக நரம்புகளுக்கும் விசேஷமாய் இரைப்பை நரம்புகளுக்கும் ஆரோக்கியமும் வலுவும் உண்டாகும்.

மாமிசதாரிகளுங்கூட அன்று மாமிசம் புசியார்கள். எண்ணெய் தேய்த்து ஸ்நானஞ் செய்யார்கள். தலைச்சவரஞ் செய்துகொள்ளார்கள். வெகுவாய் வழிப்பயணம் பண்ணார்கள். தேகசுகத்துக்கு இத்தனையாயுதவுகிற அமாவாசை விரதத்தை வேத வசனத்தோடும் ஜெபத்தோடும் கிறிஸ்தவர்கள் அனுசரிப்பது நலம் என்று என் புத்திக்குத் தோன்றுகிறது.

இந்துக்களுடைய மற்ற விரதங்களும் சுகாதாரத்தைப் பொறுத்தனவென்று பொதுவாய் எண்ணக்கூடியதாயிருந்தும்

ஒவ்வொன்றுக்கும் சாஸ்திர ஞாயஞ்சொல்லி வெளியே வருவது
மிகவுங் கஷ்டசாத்தியம். (இன்னும் வரும்)

## இந்துமார்க்கமும் பாவமும்.

கடந்த ஷை ஜூலை மீ 10 உ எப்பிப்பானி பத்திரிகையில்
ஒரு இந்து, அப்பத்திராதிபனைக் கிறிஸ்தவர்கள் மாத்திரம் இரட்
சிக்கப்படுவதானால் தேவன் பாரபட்சமுள்ளவராகமாட்டாரா?
ஆகமாட்டார் என்றால், அதற்கு நியாயஞ் சொல்ல வேண்டு
மென்று கேட்டதற்கு அப்பத்திராதிபர், "தேவன் பாரபட்சமுள்
ளவர் அல்ல, அவர் பரிசுத்தர் அவரிடம் வருவதற்கு நாமும் பரி
சுத்தராயிருக்கவேண்டும் என்றும், கிறிஸ்து மார்க்கம் ஒன்று
தவிர இதர மார்க்கங்கள் பாவ உற்பத்தி, பாவ விமோசனம் என்
பதின் விபரத்தைத் தெரியக் கொடுக்கிறதில்லை. அநேக இந்துக்
கள் பாவமே இல்லை என்கிறார்கள். பாவம் பரிகரிக்கப்பட்
டன்றி நாம் தேவனுக்கு உகந்தவர்களாகக் கூடாது" என்றும்
விடை பகர்ந்தார். இவ்விடையை ஒட்டி மற்றொருவர் ஆகஸ்டு மீ
14 உ பத்திரிகையில் இதர மார்க்கங்கள் பாவ விஷயத்தைத்
தெளியக் கொடுக்கிறதில்லை. அநேக இந்துக்கள் பாவமே இல்லை
என்கிறார்கள்" என்ற பத்திராதிபருடைய வார்த்தையை ஆட்சே
பித்துப் பேசிப் பத்திராதிபர் இதர சமயங்களை அறியாதவர்
போலும் என்று பழித்துக் கூறுகிறார். இதற்குத்தரவாகப் பத்
திராதிபர் "வேதாந்த போதகத்தின் முக்கிய போதகம் வேதாந்த
சாரத்தில் (தத்துவமசி) நீ அதுவாயிருக்கிறாய்; அல்லது நானே
மாறுத, சுத்த சைதன்னியமான, அழியாத பேரின்ப, தற்பர, நித்
திய, வேறு அற்ற பிரமமாயிருக்கிறேன் என்று சொல்லியிருக்கி
றது. இது உண்மையானால் மனிதனே தேவனாகிறான். அவன்
தேவனானதினால் அவன் பாவஞ் செய்யமாட்டான். இவ்வித
அநுமானத்துக்கே வேதாந்த வியாக்கியானியாகிய விவேகானந்த
சுவாமிகளும் வந்தார், "கிருஷ்ணனைப் பின் செல்லல்" என்ற
நூலின் ஆசாரியரும் இதற்கேற்பப்பேசி, பாவம் புண்ணியம் என்
பவை ஒன்றனோடொன்று சம்பந்தப்படுத்திப் பேசும் பண்புச்
சொற்களாம். ஆதலால் தாமாயுள்ள மேலான வஸ்துவைக் குறி
த்து இப்பதங்கள் உபயோகிக்கத்தக்கனவல்ல. பாவம் புண்ணி
யம் என்ற இரண்டிலும் சமதையாயுள்ள வஸ்துவானது புண்
ணியத்தில் மாத்திரம் மிக்க மனிதனை விட மகத்துவ வஸ்துவாய்
எங்களுக்குத் தோன்றுகிறது என்றும், இதை அநுபவப் பிரமா



ணமாய் நிரூபிக்கக் கிருஷ்ணன் பாவத்தையும் புண்ணியத்தையும்
(தம்ஜீவியத்தில் *) சமமாய்க் காட்டினர் என்றும் சொல்வதை
மேற்கோளாக எடுத்துரைக்கிறார்.

இதை வாசிக்குங் கிறிஸ்தவ பிரசங்கிகள் மேற்காட்டிய
படி இந்துக்கள் பேசும்போது, எவ்விதமான விடை பகரலா
மென்று இதனால் அறியலாம்.

## இயேசு ஜெபத்தைக் கேட்டு அதற்குப் பதிலளிக்கிறாரோ இல்லையோ என்று பார்த்தல்.

இந்தியாவிலுழைக்கும் மிஷியோனரி ஒருவர் ஒருநாள் ஓர்
பள்ளிக்கூட அறைவழியே போகும்போது ஒரு பையன் செபம்
பண்ணுகிறதைக் காதுகொடுத்துக் கேட்டுக்கொண்டிருந்தார்.
அவன் செய்த ஜெபம்:- கர்த்தராகிய இயேசுவே! என் தேசத்துக்கு
ஒரு கப்பலை அனுப்பினதற்காகவும், பொல்லாத மனிதர் என்னைத்
திருடி என்னை இங்கு கொண்டுவந்ததினால் நான் உம்மைப்பற்றிக்
கேள்விப்படவும் உம்மைச் சிநேகிக்கவும் இடம்பண்ணினதற்காக
வும் உமக்கு ஸ்தோத்திரம். இப்போதும் ஆண்டவரே! உம்மிடத்
தில் இன்னொரு தயவைக்கேட்கிறேன். தயவுசெய்து வேறொரு
கப்பலோடு பொல்லாத மனிதர்களை என்னுடைய நாட்டுக்கனு
ப்பும். அவர்கள் என் தகப்பனையும் என் தாயையும் பிடித்து இந்த
நாட்டிற்குக் கொண்டுவரவும், அவர்கள் இங்கே மிஷியோனரிக
ளுடைய பிரசங்கத்தைக் கேட்டு உம்மைச் சிநேகிக்கவும் கிருபை
செய்யும் என்பது. இதற்குச் சில நாட்களுக்குப்பின், அந்தப்பை
யன் கடற்கரையில் நின்று கப்பல்கள் வருகிறதை வெகு கவன
மாய்ப் பார்த்துக்கொண்டிருக்கக்கண்டு, இங்கே என்ன வேலை
யாய் நிற்கிறாயப்பா என்க, இயேசு கிறிஸ்து என் ஜெபத்துக்கு
மறுமொழியாகக் கப்பலையனுப்புகிறாரா வென்று பார்க்கிறேன்
என்றான். இச்சிறுவன் இவ்விதமாக வருகிற ஒவ்வொரு கப்பலை
யும் நோக்கிக்கொண்டு இரண்டு வருஷங் கழித்தான். வழக்கம்
போல் ஒரு நாளில் மிஷியோனரி அவனைக்கூர்ந்து பார்க்கையில்
அவன் மகா சந்தோஷமாய்க் குதித்துக் கூத்தாடினான். அவர்
சங்கதி என்னவென்று பையனை வினவியதற்கு, அவன் "இயேசு
கிறிஸ்துவினிடமிருந்து என் ஜெபத்துக்கு மறுமொழி வந்து
விட்டது. அதோ அந்தக்கப்பலில் என் தகப்பனுந்தாயும் வருகி
றார்கள்" என்றான். காரியம் அப்படியே இருந்தது. அவன் பெற்
றோர்கள் அந்தக்கப்பலில் வந்திறங்கினார்கள்.

---

*) மேலே அடைப்புக்குள் காட்டியவை எமது வார்த்தைகள்.

## கோடீசுவரன் கிறிஸ்தவனானது.

1908-௵ ஜூலை ௴ 5 ௳ காலையில் பிரசுரமான ஒசாக்காவின் தினவர்த்தமானியிலே அதற்கு முந்தின இரவு வெகு கில பலமுள்ளவனும் பணம் கொடுக்கல் வாங்கல் செய்வோனுமாகிய கிமூரா கொனிமோன் என்பவன் வீட்டில் ஒரு திருடன் நுழைந்து அவனை வாளால் கொன்றுபோட எத்தனித்தான் என்று எழுதியிருந்தது.

அவன் படுகாயப்பட்டும் இரண்டொரு மாதத்தில் சுகமடைந்தான். அந்தத் திருடன் அகப்பட்டுக்கொண்டான். பணத்தினாலாவது ஆத்திரத்தினாலாவது ஏவப்பட்டு இதைச் செய்திருப்பான்.

இந்த கிமூரா வாங்கின கடுவட்டிக்காகவும் இவன் கடன்காரருக்குச் செய்யும் இம்சைக்காகவும் எங்கே பார்த்தாலும் கெட்டபேர் வாங்கினதால், படுகாயப்பட்ட இவனுக்காகப் பத்திரிகைகளாவது அவ்வூராராவது எவ்வித அனுதாபமுங் காட்டவில்லை. இந்த அபக்கியாதிக்கு இவன் அருகனே அல்லவோ என்பது சந்தேகம். ஜப்பானில் பணம் லேவாதேவி செய்வது சுலபமல்ல. எப்படியோ ஜப்பானிலுள்ள சில ஜாதியார் இவனைச் சாத்தான் என்று அர்த்தப்படும் கிமூரா ஒனிகான் என்னுங் கேலிப் பேரால் அழைத்தார்கள். இப்படி இவன் காயப்பட்ட சில நாளைக்குப்பின், தெம்மா என்ற கோவிலில் நடந்த ஜெபக்கூட்டத்தில் ஒருவர் கிமூரா என்பவனுக்காக அநுதாபப்படும் கடிதமொன்றை அவனுக்கு அனுப்பவும், அன்று சாயந்திரம் அவன் குணப்படுதலுக்காகச் செபிக்கவும் யோசனைசொன்னார். அப்படியே அவ்வூர்ப் போதகர் பேரால் கடிதமெழுதி யனுப்பினார்கள். செபமும் செய்தார்கள். இப்படி அவர்கள் அன்பாய்க் கவலைப்பட்டது இவன் மனதில் ஆழ்ந்து வேலைசெய்ய, மார்க்க விஷயத்தில் ஏனோ தானோவென்றிருந்தவன் அவர்கள் காட்டிய பட்சத்தால் அசைவுண்டு, ஒசாடா என்ற போதகரண்டை போகவும், போதகர் இவனண்டை வரவும் இடமுண்டாயிற்று.

அப்படி நடக்கவே, கிமூரா சில மாதங்களுக்குப் பின் 1909 ௵ ஜெனுவரி ௴ 10 ௳ ஞானஸ்நானம் பெற்றான்.

இவன் ஞானஸ்நானம் பெறுமுன் கிறிஸ்தவர்களோடு வெகு அன்னியோன்னியமாயிருந்து சபை விஷயமாய் நடந்த கூட்டங்களுக்குப்போனான். போதகர் கிமூராவின் வீட்டிற்குப் போய் வேதத்தைப்பற்றிய விஷயங்களை இவனுக்கும் இவன் குடும்பத்தாருக்கும் போதிக்கும் வழக்கமுண்டாயிற்று. இக்குருவும் தெம்மாவூர் சபையாரும் கிமூராவின் மனமாறுதலைப் பல அடையாளங்களால் பார்த்துப் பூரிப்படைந்தார்கள். கிமூரா இருபது முப்பது லட்சத்துக்குச் சீமான்.



தனித்த பேர்வழிகளும், வியாபாரக்கூட்டத்தாரும், தெய்வாலயங்களும், பலவித தொழில் துறை ஸ்தாபனங்களும் இடைக்கிடையே நேரிடும் பணக் கஷ்டங்களில் இவன் கடன் கொடுக்க வாங்கினதுண்டு. இரண்டொரு வருஷத்துக்குமுன் க்யோட்டோவிலுள்ள பெரிய புத்தசமய ஆலயத்துக்கிருந்த கடனிமித்தமாக வியாச்சியம் உண்டாயிற்று. அச்சமயத்தார் தீர்க்கமுடியாத அத்தொகையில் விசேஷித்த பாகம் இவனுடைய சொத்து.

இவ்வளவு திரண்ட ஸ்திதிவந்தனும் ஊரெங்கும் பேரெடுப்பானவனுமான இவன் கிறிஸ்தவனானது தேசமெங்கும் பேச்சும் ஆச்சரியமுமுண்டாக ஏதுவாயிற்று. இவன் ஞானஸ்நானம் பெற்ற ஆராதனையன்று மூன்று பத்திரிகைகளின் ரிப்போர்ட்டர்கள் (விஷயங்கள் எழுதியனுப்புவோர்) ஆஜரானார்கள். ஒரு பத்திரிகைக்கு விஷயமனுப்புவோன் அடுத்தநாள் பத்திரிகையில் கிமூரா சான் இனிமேல் சாத்தான் என்று அர்த்தப்படும் ஒனி என்று அழைக்கப்படாமல் செயின்ற் என்று அழைக்கப்படவேண்டும் என்று தெரிவித்தான். சபையில் சேரும் முந்தின இரவு, தான் கிறிஸ்தவனானதற்கு இருந்த முகாந்தரத்தைப் பகிரங்கமாய்ச் சொன்னான். அது பின் வருமாறு:—"போன வருஷம் திருடனால் காயப்பட்டு என்னறையில் சங்கடத்தோடு படுத்துக்கொண்டிருந்தபோது, ஒசாடா என்ற போதகரும் ஹாயாஷி என்ற மிசியும் என்னண்டை வந்து அநுதாபம், ஆறுதல், புத்திபோதனை அடங்கிய வார்த்தைகளை எனக்குச் சொன்னார்கள். அப்போதே நான் கிறிஸ்தவனாகவேண்டுமென்று தீர்மானம் பண்ணினேன். முதல் தடவையாகச் சத்தியமார்க்கம் இன்னதென்பதைப்பற்றி மனத்தெளிவுகொண்டேன். இதற்கு முந்தி வேத விஷயங்களுக்காக ஆவலிருந்ததில்லை. வேதசாஸ்திரிதான் நன்மையான காரியங்களைச் செய்யவேண்டுமென்று நம்பினாலும், புத்த குருக்களினால் எனக்குண்டான அநுபோகம் வேதத்தைப்பற்றிச் சுத்த வித்தியாசமான முடிவுக்கு என்னைக்கொண்டுவந்தது. என் சிறுபிராயத்திலேயே என் பெற்றோர் இறந்துபோனார்கள். என் சிறுவத்திலே என் பெற்றோரின் மார்க்கமாகிய புத்தமார்க்கப்போதனையில் சார்ந்திருக்க நேரிட்டபோதினும் அதின்போதனை சீக்கிரத்தில் எனக்குக் கசந்துபோயிற்று. புத்த மார்க்கத்தைப்பற்றி நிந்தனையாகப்பேச எனக்கு மனம்வரவில்லை. ஆனாலும் பணம் லேவாதேவிசெய்யும் வியாபாரிகளாய் மாத்திரமிருக்கும் தற்கால குருக்களின் நடபடிக்கைகளைப் பிசகென்று தள்ளுகிறேன். ஜப்பானியருக்கு ஒரு மார்க்கம்வேண்டும். நான் கண்டு பிடித்ததுபோல் கிறிஸ்தவர்கள் தங்கள் உத்தியோகத்துக்

குத் தக்கவாறு நடக்கிறார்களென்பதையும், அவர்களுக்கு நற்ப ழக்கங்கள் உண்டு, அவர்கள் நற்காரியங்களைச் செய்துவருகிறார்கள் என்பதையும் ஜப்பானியர் அறிந்துவருகிறார்கள்.

கிறிஸ்தவனாய்ப்போக நான் சத்தியவேதத்தைப் படிக்கிறேனென்று புத்த குருக்கள் கேள்விப்பட்டபோது அவர்கள் என் வீட்டுக்கு வந்து என்னை அந்த நோக்கத்திலிருந்து புரட்டிப் போடப் பிரயாசைப்பட்டார்கள். நான் அதுவரையில் போய் வந்தகோவிலில் பணிசெய்த புத்தகுரு பொல்லாதவனானால் எனக்கென்று அவனைத் தள்ளிவிடுவது தங்களுக்குச் சுலபமான காரியமென்று சொன்னார்கள். நான் அவர்களுக்கு, கயோட்டாவாகிய அடித்தலத்திலேயே பொல்லாப்பின் ஊற்றிருக்கின்றதென்று உத்தாரஞ்சொன்னேன். அதற்கு அவர்கள், கிறிஸ்துமார்க்கம் ஜப்பானுக்குப் புதிதாயிருப்பதால் இன்றைக்குச் சுத்த மார்க்கந்தான். 300 வருஷங்களுக்குப் பிறகு அது தனக்குச் சத்துருக்கள் இல்லாதபோதிலும் தானே அழிந்துபோகும்படியான கெடுதிக்கும் தப்பறைக்கும் உள்ளாகிவிடும் என்று சாதித்தார்கள். அதற்கு நான் இப்போது வயோதிபன். இந்தத் தீர்க்கதரிசனம் நிறைவேறுமட்டும் உயிரோடிருப்பதில்லை. அதைப்பற்றி எனக்கென்ன கவலை என்று சொல்லிப்போட்டேன்.

புத்த குருக்கள் என்னோடு பேசி என்னை மேற்கொள்ள முடியாமல் போக தென்ரிகையோ என்பதின் போதனுசிரியர்கள் நான் சொல்வதை நிராகரிக்க அழைத்தார்கள். (தென்ரிகையோ என்பது ஷிந்தோவிஸம் எனும் புத்தமார்க்க உட்பிரிவிருந்துண்டான கட்சி. இது சில வருஷங்களுக்குள் வெகுதூரம் பரவிற்று. இதைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் கீழ்த்தர ஜாதிகள்) அவர்கள் என்னை எவ்விதத்திலும் அசைத்து என் மனமாறப் பண்ண முடியாமற்போயிற்று.

நான் என் முந்திய பழைய பழக்கவழக்கங்களை அடியோடே தொலைத்துவிட்டு இனிமேல் பராபரனுடைய திருச்சித்தப்படி நடக்கப் பேராவல் கொண்டேன். கிறிஸ்தவனாய் நடக்க எனக்குத் திராணி உண்டாக உங்களுடைய உதவியையும் அநுதாபத்தையுந் தேடுகிறேன். கோபோ என்ற நூலாசிரியருடைய நடைபோல் எழுத எவ்வளவு பிரயாசைப்பட்டாலும் அது முடியாவண்ணம் கிறிஸ்தவர்களில் சிலர் தங்களுக்கு முன்னுள்ள உயர்ந்த மாதிரிப்படி தேர்ச்சியடையாமல் தவறிப்போவார்கள் என்று நான் அறிந்திருப்பதால் நான் இந்த மார்க்கத்தில் சேர என்னை ஏவுகிறது கிறிஸ்தவர்களுடைய நடத்தை மாத்திரமல்ல'' என்பதே.

இந்த வயோதிபன் இப்படி மெய்ம்மார்க்கத்திற்கு வந்ததினால் இவனும் இவன் குடும்பமும் குணப்படுகிற அநேகரைப்போல் தங்களுக்கு முன்னிராத புது உணர்ச்சிகளை அடைந்தனர்.



ஒருவன் தன்னுடைய எண்ணப்போங்கு ஜீவியப்போங்கு முதலியவைகளை இந்த வயதில் மாற்றுவது வெகு கஷ்டம். ஆதலால் இவன் தன் வழியை எல்லாம் செவ்வையாக்க முயலுகையில் அது ஆண்டவருடைய சகாயத்தினாலும், கிறிஸ்தவ சகோதர சகோதரிகளின் பக்தியுள்ள கூட்டுறவினாலும் அவர்களுடைய அநுதாபமும் நல்நடத்தையுமாகிய துணையினாலும் முடியுமே ஒழிய மற்றப்படி முடியாது என்று அவன் அறிந்துகொள்ளுகிறான்.

இந்தியாவிலுள்ள திருச்சபைக்கு இனிமேல் தாய்ச் சபையின் பொருள் உதவி தேவையாகாதபடிக்குக் கர்த்தர் இத்தேசத்திலும் இப்பேர்ப்பட்ட ஆஸ்திக்காரரை விசுவாசிகளின் கூட்டத்தோடு சேர்ப்பாராக.

---

## நமது மலாய் நாட்டுச் சபை. (முடிவு.)

கர்த்தர் கிருபையால் இவ்வண்ணம் சபைக்குப் புதிதாய்க் கிடைத்த நிலத்தில் மிசியோன் ஸ்தோத்திரப் பண்டிகை சம்பந்தமாய்ப் பிள்ளைகளின் உற்சவம் ஒன்று கொண்டாடப்பட்டது. அன்று மாலை $4\frac{1}{2}$ மணிக்குச் சபையார் பிள்ளைகளுடன் ஏற்கனவே அறிவித்திருந்தபடி கோவில் தோட்டத்தில் கூடிவர, பாடகர் ஒரு இனிமையான ஞானப்பாட்டைப் பாட, சபை குரு ஜெபஞ் செய்து தான் 8 வருஷத்துக்கு முன் முதன்முறையாய் இங்கு வந்தபோது தேவாராதனை நடத்திய இடத்தையும் அதற்கு எதிர்த்தாப்போல் தற்சமயம் ஆராதனை நடத்த ஜெப வீடு கிடைத்த விதத்தையும் இனி இத்தோட்டத்தில் கர்த்தரின் மகிமைக்கென்று ஆகப்போகும் தேவாலயம், கட்டடம், சபைப் பெருக்கம் முதலியவற்றின் நம்பிக்கையையும் எழுப்புதலாய் எடுத்துக் காட்டித் தோட்டத்தைச் சபையின் உபயோகத்துக்கென்று திறந்துவிட, பிள்ளைகளுக்குப் பந்தய ஓட்டம், பானை உடைத்தல் முதலிய விளையாட்டுகளும், பரிசளிக்குதலும், வந்திருந்த பெரியோருக்கு தே நீர்ப் பானமளித்தலும் நடந்தேற, அன்று உற்சவம் சந்தோஷமாய் முடிவு பெற்றது.

கர்த்தர் கிருபையால் சபைக்குச் சொந்தமான நிலங் கிடைத்தது. இனித் தேவாலயக் கட்டட முயற்சி நடந்தேற வேண்டியது. தேவாலயக் கட்டடத்துக்கு 10,000 வெள்ளி (ரூ. 17,500-00-00.) மதிப்பிட்டிருக்கிறது. ஒரு சபைக் கூட்டங் கூடி இத்தொகை சேரும் வழி வகைகளைக் குறித்து யோசித்ததில் சபையார் ஏற்கனவே உள்ள சபையின் காரியஸ்தருடன் வேறு ஆறு பேரைச் சேர்த்துக் கோவில் கட்டட கமிட்டியாக அப் பன்னிருவரை நியமித்துக் கோவில் கட்டும் விஷ

யத்தில் அவர்கள் செய்யும் ஏற்பாட்டை ஒப்புக்கொள்வதாய்த் தீர்மானித்தது. சங்: H. மத்தேஸ் ஐயரவர்களைத் தலைவரும் சங்: T. யோசேப்பு ஐயரவர்களை உப தலைவருமாகக் கொண்ட இக்கமிட்டியார், சபையில் சம்பாத்தியமுள்ள ஒவ்வொரு அவயவமும் தன் ஒரு மாதச் சம்பளத் தொகையைக் கோவில் கட்டடப் பொக்கிஷத்துக்கு ஒரு வருஷக் கெடுவுக்குள் செலுத்துவது நலம் என்பதாய் அபிப்பிராயப்பட்டுச் சபைக்குத் தெரிவிக்க, சபையார் அவ்வண்ணமே ஒரு மாதச் சம்பளத்தைச் செலுத்துவதாகத் தீர்மானித்துக் கையொப்பம் வைத்தார்கள். இத்தோடு கோவில் கட்டடப் பொக்கிஷத்துக்குப் பணம் சேகரிக்கத் தண்டல் சீட்டுகளும் கொடுக்கப்பட்டன. நிலம் வாங்கின மூன்றும் நாள் நாட்டுக்கோட்டை செட்டியாரொருவர் கோவில் கட்டடத்துக்கு 100 வெள்ளி (ரூ. 175-0-0.) காணிக்கையாகக் கொடுத்ததைச் சந்தோஷத்தோடும் நன்றியறிதலோடும் இங்கெடுத்துரைக்கிறோம். இவ்வண்ணம் பெரிய திருப்பணிக் காரியத்தை மனதில் வைத்துக் கர்த்தரை நம்பி இத்தண்டல் சீட்டுகளைக் கையிலேந்தி அங்குமிங்கும் சுற்றிப் பிரயாசைப்பட்டு வருகிறோம். கோவில் கட்டடத்துக்கு உதவிபுரியும் கனவான்களின் நாமங்களும் அவர்கள் கொடுக்கும் தொகை விபரமும் அருணோதய மூலமாய் வெளிப்படும். இவ்விதம் கடந்த மூன்று வருஷ விசேஷங்களைத் திரட்டிக்காட்டி இம்மட்டும் வந்திருக்கிறோமென்பதைத் தெரிவிக்கிறோம். கர்த்தர் ஒருவருக்கே மகிமை உண்டாவதாக.

கோலாலம்பூர்,
1-9-1909. } அ. ச.

---

## பத்திராதிபர் குறிப்புகள்.

### பாண்ரே, ச. வி - ம - ச. நிதி.

சகோதர விருத்தி மரணசகாய நிதியின் இரண்டாம் வருஷாந்த விருத்தாந்தம் ஒன்று வரப்பெற்றோம். அதின்படி இந்நிதியின்சந்தாதார்கள் தொகை தற்சமயம் 357. கடந்த வருஷத்தில் இறந்தவர்களின் 5 வாரிசுகளுக்குக் கொடுத்த தொகை ரூ 197-7-6. தற்சமயம் இந்நிதியின் கையிருப்பு வரவு செலவுபோக ரூ 706-3-6. இந்நிதியோடு சம்பந்தமான கலியாண நிதியில் தற்கால மெம்பர்கள். 10. இந்நிதியின் கையிருப்பு ரூ 148-6-10.

இந்நிதிகள் நாளடைவில் நல்விர்த்தியடைந்து வருவதைக் கவனித்துச் சந்தோஷப்படுகிறோம்.

பத்திராதிபர்.

---



## மிசியோன் சமாச்சாரங்கள்.

### குருப்பட்டாபிஷேகம்.

### சென்னை, புரசை, அடைக்கலநாதர் ஆலயம்.

உலக முடிவுமட்டாகச் சகல நாட்களிலும் உங்களுடனே கூட இருப்பேன் என்று திருவாய் மலர்ந்தருளிய ஆண்டவர் நமது உத்தரன் திருச்சபையிலும் சுத்த போதகத்தைக் கற்றறிந்த சுதேச குருமாரைக் காலாகாலங்களில் எழுப்பி அதை நாளொரு வண்ணமாய்க் காப்பாற்றி நடத்திவருகிற அவருடைய மட்டற்ற அன்புக்காக அவருக்கிஸ்தோத்திரம்.

சென்ற 1904-ம் ௵ மார்ச்சு ௴ முதல் $3\frac{1}{2}$ வருஷங்களாக நமது தரங்கை வேதசாஸ்திர வித்தியாசாலையில் கற்றுத்தேறிய 12 பிரசங்கிமாருள் இருவராகிய சங். சா. முத்துசாமி பிரசங்கியாரும், சங்: ஆ. க. செபஸ்தியான் பிரசங்கியாரும் 1909-ம் ௵ நவம்பர் ௴ 28-ம் உ யன்று ஷ ஆலயத்தில் அபிஷேகிக்கப்பட மகா கனம்: ஆலோசனைச் சங்கத்தாரால் உத்தரவாயிற்று. இதின்படியே அடைக்கல நாதர் ஆலயம் பச்சிலை முதலியவைகளால் அலங்கரிக்கப்பெற்று, மணவாளனுக்கு ஆயத்தப்பட்ட மணவாட்டியைப் போல் சிறப்புற்றிருந்தது. இவ்விசேஷத்திற்கென்று சங். சிரேஷ்டர், சங். S. சேமே, சங். T. S. S. யாக்கோபு, சங். K. A. தாவீது, சங். இ. தேவசகாயம் ஐயர்மார் வந்திருந்தார்கள். ஞாயிறு காலை $8\frac{1}{2}$ மணிக்கு அடைக்கலநாதர் ஆலயத்தின் மணி 3-ம் முறையாகச் சத்தமிட்டு நிற்க, ஆலயத்துக்குச் சமீபித்துள்ள மிசியோன் பங்களாவில் கூடியிருந்த ஐயர்மார் 382-ம் ஞானப்பாட்டைப் பாடினார்கள். இச்சத்தம் அமர்ந்தபின் முறையே சிரேஷ்டர் அவர்களும், பின்னர் இரு பிரசங்கிமாரும், ஐயர்மாரும் இருவர் இருவராக அங்கிதரித்தவர்களாய்த் தொடர்ந்து கோவிலின் புராதன வாசல்வழியாய் உட்புகுந்து தம்தம் இடத்தில் உட்கார்ந்தார்கள். வந்த ஜனத்திரளுக்கு இடம் போதாமையால், அனேகர் கோவிலுக்கு வெளியே உட்காரவும் பலர் நிற்கவும் நேரிட்டது. இந்நாளின் கொண்டாட்டத்துக்கு இராயபுரம் விடிவெள்ளி ஆலயச்சபையும் வந்திருந்து இவ்வுற்சவத்தில் பங்கு பெற்றது சந்தோஷமே. தேவாராதனை துவக்கமாக நமது கின்னரக்காரர் இரு கைக்கின்னரக்காரரின் உதவி பெற்று "களிகூரு சீயோனே" என்ற இனிய கீதத்தைத் தொடங்கப் பாடகர் குழாம் பாடிய ஓசை நம்மனதைப் பரவசப்படுத்தியது. முறைமைப்படி வட்டசீனியர் சங். E. புருட்சர் ஐயர் பீட ஆராதனையை நடத்த, நமது வேத சாஸ்திர வித்தியாசாலைத் தலைவராகிய சங். S. சேமே ஐயர் பிரசங்க பீடமேறி, அந்நாளின்

புதிய நிருப வாக்கியமாகிய 24-ம் சங்கீத ஆதாரமேற்கொண்டு "கர்த்தரே தெய்வம் என்பது இப்புது வருஷத்தில் நம்மிடத்தில் புதுப்பாட்டாவசனமாக" என்பதை முக்கிய பொருளாகக்கொண்டு, கர்த்தரே தெய்வம், ஆகையால் இதை உணர்ந்தவர்களாக அவரண்டை சேர்வோமாக என்றும்; இதை உணர்ந்தவர்களாக அவரை ஏற்றுக்கொள்வோமாக என்றும் பிரசங்கித்தார். இப்பிரசங்கம் அளவில் நீண்டிருந்தும் பொருளில் பெருகி நின்றதால் நேரம்போனது தெரியவில்லை. பிரசங்கம்முடிந்தபின் சங். சிரேஷ்டரவர்கள் பீடம்விட்டெழுந்து தம்முன்னின்ற பிரசங்கிமார் இருவருக்கும் மத். 21, 6. 7. வாக்கியங்களை ஆதாரமாக்கி தேவ ஊழியத்தின் ஸ்தாபகம், மேன்மை, உத்திரவாதம் என்பவைகளைப் பற்றிப்பேசி, தேவ ஊழியர் காண்பிக்கவேண்டிய எதிர்ப்பேச்சற்ற கீழ்ப்படிதல், நேர்மை, உழைப்பு, உண்மை முதலியவற்றைப்பற்றிய புத்திமதிகளை உள்ளத்தில் பதிய உரைத்து, நமது முறைமைப்படி குருத்தொழிலை உண்மையாய்ச் செய்யப் பராபரனுக்கும் சபைக்கும் முன்பாகப் பிரசங்கிமாரிடம் வாக்கு கேட்டார்கள். இவர்களோ கேட்டபடி வாக்கு கொடுத்துக் "கர்த்தர் தங்களுக்கு உதவி செய்வாராக என்று சொல்லி முழங்கால்படியிட்டார்கள். குருப்பட்டம் கொடுக்கப்பட்டது. அப்போது கனம். முத்துசாமி ஐயர்மேல் கை வைத்த சங். S. சேமே ஐயர் வசனித்து "கர்த்தர் யோசுவாவுக்குச் சொன்ன வசனம் உம்மிடத்திலும் நிறைவேறுவதாக. கர்த்தர் தம்முடைய ஊழியரைக்கொண்டு உமக்குக் கற்பித்த வசனத்தின்படியெல்லாம் செய்யக் கவனமாயிருக்கப் பலத்துக்கொண்டு திட மனதாயிரும். நீர் போகிற இடத்திலெல்லாம் புத்திமானாய் நடந்துகொள்ளும்படிக்கு அதை விட்டு வலது இடதுபுறத்துக்கு விலகாதிருப்பீராக. கர்த்தருடைய வசனம் உமது வாயை விட்டுப் பிரியாதிருப்பதாக. அதில் எழுதியிருக்கிறபடியெல்லாம் செய்யக் கவனமாயிருக்கும்படிக்கு இரவும் பகலும் அதை யோசித்துக்கொண்டிருப்பீராக. ஏனெனில் அப்போது நீர் உமது வழியை உமக்கு வாய்க்கப்பண்ணி, புத்திமானாய் நடந்துகொள்ளுவீர். பலத்துக்கொண்டு திடமனதாயிரும். கலங்காமலும் திகையாமலுமிரும். ஏனெனில் நீர் போகிற இடத்திலெல்லாம் உமது பராபரனாகிய கர்த்தர் உம்மோடு இருக்கிறார்." (யோசு. 1, 7-9) என ஆசீர்வாதங்கூறினர். பிறகு சங்: ஞா. தேவசகாயம் ஐயரும் அவர்மேல் கை வைத்து "நம்மை முழு இருதயத்தினாலும் தேடினீர்களானால், நம்மைத் தேடுகையில் கண்டுபிடிப்பீர்கள். நாம் உங்களுக்குத் தென்படுவோம். (எரே. 29, 13. 14.) "அவர் பெருகவும், நானோ சிறுகவும் வேண்டியது" (யோவா. 3, 30.) என்று வாழ்த்துக் கூறினர். சங். செபஸ்தியான் ஐயர்மேல் கை



வைத்த சங். E. புருட்சர் ஐயர் "நான் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தால், அதினால் எனக்குப் பெருமைபாராட்டல் இல்லை; ஏனெனில் அது என்மேல் விழுந்த கடன். நான் சுவிசேஷத்தைப் பிரசங்கியாதேபோனேனேயாகில் எனக்கு ஐயோ. இதை நான் மனதாரச்செய்தால் எனக்குப் பலன் உண்டு; மனதில்லாமல் செய்தாலும் உக்கிராண விசாரிப்பு எனக்கு ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது" (1 கொரி. 9, 16-17.) என்னும் வசனத்தையும் சங்: T. S. S. யாக்கோபு ஐயர் "நீயோ பராபரனுடைய மனுஷனே இவைகளை விலகியோடி நீதியையும் தெய்வபத்தியையும், விசுவாசத்தையும், சிநேகத்தையும், பொறுமையையும் மெத்தனவையும் பின்தொடர்ந்துபோ. விசுவாசத்தின் நற்போராட்டத்தைப் போராடு. நித்திய ஜீவனைப் பிடித்துக்கொள். அதற்கு நீ அழைக்கப்பட்டவனும் அனேகம் சாக்ஷிகளுக்கு முன்பாக நல்ல அறிக்கையை அறிக்கைபண்ணினவனுமாமே." (1 தீமோ. 6,11-12.) என்னும் வசனத்தையும் வாழ்த்துதலாகக் கூறினர்கள். ஆராதனை முடிந்தபின் புது குருமார்களுக்குச் சுவேதிஷ் வட்டத்துக் காரியதரிசியாகிய சங். சாந்தகிரேன் சாஸ்திரியார் அளித்த 2 ஞாபகசின்னங்கள் கொடுக்கப்பட்டது. உடனே குருமார் யாவரும் இருவர் இருவராக அணி வகுத்து மிசியோன் பங்களாவுக்கேகி 362-ம் ஞானப்பாட்டைப் பாடியபின் கூட்டம் கலைந்தது.

அன்று பகல் எமது சபை முகாமைச்சங்கக் காரியதரிசி மகா ா. ா. ஸ்ரீ. C. ஞானப்பிரகாசம் பிள்ளை சுதேச குருமார் யாவருக்கும் அன்போடு விருந்தளித்தனர். சாயந்திரம் 4 மணிக்கு நமது Y. M. B. Union. சங்கத்தார் எல்லாக் குருமாரையும் வரவழைத்து தேத்தண்ணீர் முதலிய சிற்றுண்டிவுகளைக் கொடுத்துப் புது குருமாருக்கு வந்தன வாழ்த்துதல் கூறினர். அச்சமயம் சங்: S. சேமே ஐயர் அக்கிராசனபதியாக வீற்றிருக்க, சங். சிரேஷ்டர் இச்சங்கத்தின் அவயவங்கள் கேட்டுக்கொண்ட வேண்டுகோளுக்கு இணங்கி இச்சங்கத்துப் போஷகராக (Patron) இருக்கச் சம்மதித்து, சமயோசித புத்திமதிகளைக் கூறினர்.

மாலை 6 மணிக்கு அடைக்கலநாதர் சபை குருமாரெல்லாரையும் வரவழைத்து, புது குருமாருக்கு மாலைசூட்டி, வாழ்த்துதல்கூறி அவர்களொவ்வொருவருக்கும் புத்தக இனமளித்தார்கள். இச்சமயம் பாண்டேர் மதுவிலக்குச் சங்கம் தனது அவயவங்களில் ஒருவராகிய ஸ்தேவான் உபாத்தியாரை யனுப்பித் தங்கள் வாழ்த்துதலைக்கூறிற்று. இத்துடன் எமது கொண்டாட்டம் முடிவுபெறுமல் பாண்டேரிலிருந்து வந்திருந்த ஞானதிக்க தேசிகர் சில பல பாடல்களைப் பாடிப் பாவமன்னிப்பின் நிச்சயம் அடையவேண்டுமென்றும், புது வருஷத்தில் புது ஜீவியம் செய்யவேண்டு

மென்றும் போதித்துப் பஜனை செய்ததோடு முடிவுக்கு வந்தது. இச்சுப தினத்தை இங்கே கொண்டாடும்படி இடங்கொடுத்த சங். ஆலோசனைச் சங்கத்தாரவர்களுக்கும், இக்கொண்டாட்டத்தைச் சிறப்பிக்க வந்த குருமாருக்கும் முகாமைச்சங்கம் வந்தனம்கூற, சிரேஷ்டர் ஆசீர்வாதஞ் செய்து உற்சவத்தை முடித்தார்.

புது குருமாரைத் தமது வரங்களாலும், கிருபைகளாலும் முடிசூட்டி ஆசீர்வதிக்க நமது நேச பரம பிதாவை வேண்டிக் கொள்ள நாமனைவரும் மறவாதிருப்போமாக. C. A. Arp.

புரசை,
28 நவம்பர் 1909.

## வர்த்தமான சங்கிரகம்.

1. சென்னை மெயில் பத்திரிகைக்கு விஷயம் எழுதுவோராகிய ஏகாம்பரமையர் சென்ற அக்டோபர் மீ 31-ம் உ மகுலிப்பட்டணத்தில் நோபில் காலேஜ் என்ற கல்லூரியின் தலைவராகிய Penn M. A. ஐயரவர்களால் தாமஸ் ஏகாம்பரம் என்னும் பேரோடு ஞானஸ்நானம் பெற்றார். இவர் மாயவரத்திலுள்ள ஒரு பிராமண குடும்பத்தைச் சேர்ந்தவர். காலஞ்சென்ற நியாயாதிபதி முத்துசாமி ஐயரவருடைய பெந்து. இவர் மோனகன், டாக்டர் மில்லர் என்ற பக்திமான்களின் போதனையாலும் சாதனையாலும் கிறிஸ்துமார்க்கத்துக்குச் சார்புள்ளவரானார்.

2. இங்கிலாந்து: பல வருஷங்களுக்கு முன் கல்கத்தா ஹைகோர்ட்டில் நியாயாதிபதியாயிருந்து இப்போது லண்டனிலே குடியிருந்துவரும் சையத் அமீர்ஹாலி என்பவர் கடந்த நவம்பர் மீ 23 உ இராஜ சக்கரவர்த்தியின் ஆலோசனைச் சபையின் (Privy council) அவயவமாக நமது காருண்ணிய சக்கரவர்த்தியால் நேமனம்பெற்று வேலையை ஒப்புக்கொண்டார். இது இந்தியாவில் மகம்மதியருக்கு அளவிறந்த சந்தோஷத்தை உண்டாக்கிற்று.

3. இந்தியா. நமது வைசிராய் லார்ட் மின்டோ பிரபு திக்குவிஜயஞ்செய்து வரப்புறப்பட்டு அமிதபாத்தில் அவரும் அவர் பத்தினியாரும் ஊர்வலம் வந்து கொண்டிருக்கையில், யாரோ துஷ்டர் வெடிகுண்டொன்றை அவரேறியிருந்த வண்டியின் மேலெறிந்தனராம். ஆகிலும் சேதமொன்றும் நேரிட்டதில்லை. இச்செய்கை செய்தவர்களைக் கண்டு பிடிப்பவர்களுக்கு 5000 ரூபாய் வெகுமதி யளிப்பதாகக் கவர்ன்மெண்டார் பிரசுரித்திருக்கிறார்கள்.

Printed at the Ev. Luth. Mission. Press, Tranquebar. 1910.

## சகோதர விருத்தி மரண சகாய நிதி.

1. 173 ம் நீ தாவீது இரத்தினசாமி பிள்ளை சென்ற செப்டெம்பர் மீ 12-ம் உ கூடலூரில் இறந்துபோனதால், அவரது வாரீசுக்காக, 12 வது மரண அழைப்புக் கார்டு நாளது தேதியில் அனுப்பப்படுகிறது.

2. இறந்துபோகும் மெம்பர்களின் வாரீசுக்கு அதிகமாய்ச் சகாயத்தொகை கிடைக்கும் பொருட்டு ஒரு மரண அழைப்புக்கார்டு பிறக்கும் தேதியில் ரிஜிஸ்தரிலுள்ள எல்லா மெம்பர்களும் மரண அழைப்புத்தொகை செலுத்தவேண்டியது என்ற விஷயம், கமிட்டியாரின் தீர்மானத்தில் மேல் விதியாக ஏற்படும்.

பாண்டூர், திருவள்ளூர்,
செங்கல்பட்டு ஜில்லா,
23-ம் உ டிசம்பர் 1909.

R. Schomerus,
*President.*

**சுவி. லூத். மரண சகாய மெம்பர்களுக்கு அறிவிப்பு.**

இந்நிதியின் 51வது மரண அழைப்புக்கார்டுகள் டிசம்பர் ஸ்ரீ 10-ம் வ. அனுப்பப்பட்டன.

சென்னை, புரசை.
10 - 12 - 1909.

P. Samathanam,
*Secretary.*

